# மைத்திராயணி யோபநிஷத்து

## முதல் பிரபாடகம்.

1. பிருகத்ரதனெனு மரசன் தமது இராச்சியத்தில் தமது மூத்த குமாரனை வைத்துத்தமது சரீரம் நிலையல்லவென வெண்ணி வைராக்கியத்தை யடைந்து வனத்திற்குச் சென்றான்.

2. அவ்வனத்தில் மேலான தவத்தைச் செய்து கொண்டு சூரி யனைப் பார்த்தவண்ணம் தூக்கியகையை யுடையவனாக விருந்தான்.

3. ஆயிரம்வருடஞ் சென்றபிறகு புகையில்லாத நெருப்பினைப் போலப் பிரகாசரூபமாய்ப் பிரமநிஷ்டரான பகவான் சகாயன்யமுனி வர் அவன் சமீபத்தேயடைந்தார்.

4. எழுந்திரு! எழுந்திரு! வரத்தைக் கேட்டுக்கொள் என முனிவரர் அரசனைப்பார்த்துச் சொன்னார்.

5. அவன வருக்கு நமஸ்'சாரஞ்செய்து சொன்னதாவது, ஓ பகவானே! நான் ஆத்மவித்தல்ல, நீர் தத்துவவித்தென்று நாங்கள் பெரும் பாலுங் கேட்டிருக்கிறோம். அதை யெமக்கு நீர் சொல்லவேண்டு மென்றனன்.

6. ஓ இட்சுவாகு வம்சத்திற்பிறந்த அரசனே! இவ்வித அசக்கியமான கேள்வியை முதலில் கேட்கவேண்டாம், மற்றைய விச்சைகளைக் கேட்டுக்கொள் என்றனர் முனிவர்.

7. சாகன்னியருடைய திருவடிகளிற் பணிந்து அரசனிந்தக் கதையைச் சொல்லினன்.

8. ஓ! பகவானே ! எலும்பு தோல் நரம்பு சீழ் மாமிசம் சுக்கி லம் சோணிதம் கோழை கண்ணீர் இவைகளாற் கெடுக்கப்பட்டதும், மலம் மூத்திரம் வாதம் பித்தம் கபம் இவைகளின் கூட்டமாயதுமான, துற்கந்தம் நிறைந்த சாரமில்லாத இச்சரீரத்தில் இச்சாபோகங்களாற் பிரயோசன மென்ன?

9. காமம் குரோதம் லோபம் மோகம் விஷாதம் ஆசூயை இஷ் டத்தைவிடல் அநிஷ்டத்தையடைதல் பசி தாகம் வயோதிகம் மிருத் தியு ரோகம் சோகம் இவைகளால் நிறைந்த சரீரத்தில் இச்சாபோகங்களால் பிரயோசன மென்ன?

10. இவையனைத்தும் காட்டீக்கள் கொசுக்கள் முதலியவற்றைப் போலும், புல்லைப்போலும் நாசமடைவதென வறிந்தோம், இவைகளைச் சொலுவதா லென்ன பிரயோசனம்?

11. எமக்கு முந்தியிருந்த மகாபராக்கிரம சாலிகளான சக்கிரவர்த்திக ளனேகரும், சுத்துயும்நன், இந்திரதுயும்நன், குவலாயுசுவன், யுவனாசுவன், வத்தியாசுவனன், அசுவபதி, சசிபிந்து, அரிச்சந்திரன் அம்பரீஷன், அந்நுக்தன், சுவர்யாதி, அநபண்ணியன், அட்சசேனன் முதலியவர்களும்; மேலும் மருத்தன் பரதன் முதலிய சிலவரசர்களும் சுற்றத்தினர் விழித்துக் கொண்டிருக்கும்போதே பெரிய செல் வங்களை யிழந்து இவ்வுலகை நீங்கிப் பரலோ கமடைந்தார்கள், இவர்களாலென்ன பிரயோசணம்?

12. வேறு கந்தர்வர் அசுரர் யட்சர் இராட்சதர் பூதங்கள் நட்சத்திர கணங்கள் பிசாசங்கள் உரகர் கிரகங்கள் இவைகட்கும் பந்தம் காண்கின்றோம்.

13. இவ்வளவு சொல்லியும் என்னபிரயோசனம்? அனேகசமுத்திரங்கள் வற்றவும், மலைகள் பொறுங்கவும், துருவன் இடம் விட்டு நகரவும், மரங்கள் நிலைகுலையவும், பூமியமிழ்ந்தவும், தேவர்களிடம் விட்டு ஓடவும் நேர்தலால், நான் இது என்ற சமுசாரத்தில் இச்சா போகங்களால் என்ன பயன்?

14. துக்கங்களால் கட்டுப்பட்டவனுக்கே நீங்காமல் இங்கிருக்கும்படி நேரிடுகிறது? ஆகலின் என்னை நீ உத்தரணஞ் செய்யவேண்டும், கிணற்றிற்கிடக்கும் தவளைப்போல நானிந்தச் சம்சாரத்தில் இருக்கின்றேன், ஓபகவானே! நீயே யெனக்குக்கதி, ஓபகவானே! நீயே யெனக்குக்கதி.

## இரண்டாம் பிரபாடகம்.

1. இனி பகவான் சாகாயன்யர் அன்புடன் அரசனைப் பார்த்துச் சொன்னதாவது, ஓ மகாராஜ! இட்சுவாகு வம்சத்தின் கொடிக்குத் தலையாயுள்ளவனே! பிரகத்ரக! நீ ஆத்மாவை யறிந்தமையால் கிருத கிருத்தியன், மருத் என்பவனுக்குப் பிரசித்தனான புத்திரனானாய், இவனல்லவோ உனதாத்மா, எந்தச் சச்சிதானந்தனை உனக்கு நான் நிரூபிக்கவேண்டும்.

2. எவன் வெளிப் பொருள்களைக் கைக்கொண்டு மேலே கிளம்பு வானாய், துக்கப்படாதவனாய், தமசைப் பிரேரிக்கின்றானோ இவனாமா, பிறகு இச்சரீரத்தினின்று வெளிகிளம்பிய விந்தத் தெளிவு பாஞ்சோதியையடைந்து சுவரூபத்துடன் நிற்கின்றதோ அது ஆத்மா, அது அமிர்தமும் அபயமும் பிரமுமாமென்றார்.

3. இனி இந்தப்பிரம வித்தையும் எல்லா உபநிடத வித்தைகளும் ஓ அரச! எமக்குப் பகவான் மைத்ரேயர் உபதேசித்தவை, அவற்றை யுனக்குச் சொன்னேன்.

4. இனிப்பாவங்களை யொழிந்தவர்களாய்ப் பூரண தேஜசையு டையவர்களாய் ஊர்த்துவரே தசுக்களாய்'உள்ளவாலகில்யர் பிறகு பிரமாவைப் பார்த்துச் சொன்னார்கள்.

5. ஓ பகவானே! ஒரு வண்டியைப்போலச் சேதனமானது இச்சரீரம், எந்த இந்திரியங்கட்கு அகப்படாத பூதத்திற்கு இம்மகிமை யுள்ளது, எத்துடன் இச்சரீரம் சம்பந்தமானவுடன் சேதனம்போலத் தோன்றுகிறது, இதற்கேவுதல் செய்பவன் எவன், எங்கட்குச்சொல்ல வேண்டுமென்றனர்,

6. அவர்களைப்பார்த்துச் சொன்னதாவது, எவன் வாக்கால் மேலே யுள்ளவனாகக் கேட்கப்படுகின்றான் அவன் சுத்தன் பூதன் சூன்யன் சாந்தன் பிராணனில்லாதவன் அநீசன் அநந்தன் அட்சயன் ஸ்திரன் சாசுவதன் அஜன் சுவதந்தரன் தன்மகிமையுள்ளவன் அவதலே இச்சரீரம் சேதனம்போலப் பிரதிஷ்டை செய்யப்பட்டது இவன் தானிதற்குப் பிரோகன்,

7. எங்கனம் என்று கேட்க அவர்கட்குபதேசித்தார், இவன் சூட்சுமன் கிருக்கிக்கப் படா தவன் காணப்படா தவன் புருஷனெனப் பேருள்ளவன் அஞ்ஞான பலத்தால் இங்கே போரம்சத்துடன் சுழல்கினான், அவனே சுழுத்தியிற்போலப் புத்திபூர்வமாய் விழித்துக் கொள்கிறான், எவனிவனதம்சமோ அவன் சேதன மாத்திரன், பிரதி புருஷன்களிலும் க்ஷேத்திரஞ்ஞனாய் சங்கல்பம் அத்தியவசாயம் அபிமானம் இவைகளைக் குறியுடை யவனாய்ப் பிரஜாபதியாய் உலகங்களைப் பார்ப்பவனாய் இருக்கிறான், அச்சேதனனாலே இச்சரரீசம் சேதனம் போலேயமைக்கப்பட்டது இச்சரீரத்திற்கு அவனேபிபோகன்.

8. ஓபகவ! ஈஸ்வரன் எங்ஙனம் அம்சத்துடனிருப்பானென அவர்கள் கேட்டார்கள்.

` 9. * பிரஜாபதியன்றோ முதலிலிருந்தார், அவரொருவனாயிருந்து திருப்பதியடையவில்லை, அவன் தன்னாலே தன்னைத்தியானம் செய்து அனேக பிரஜைகளையுண்டாக்கினார், அவைகளவனிடத்து அறிவில்லாமல் கட்டைகள் போல் நிற்பதைக் கண்டான். அவன் அதிலுந்திருப்தியடைய வில்லை, அவன் இவைகளுடைய இருதயத்திலே அறிவையுண்டாக்குவதற்காக நாம் பிரவேசிப் போமென்று நினைத்தான், பிறகு அவன் வாயுவாகவும் ஜீவனாகவும் தன்னைச் செய்து உள்ளே புகுந்தான், அவனொருவனாயுள்ளே பிரவேசிக்கவில்லை, அவனைந்தாகத் தன்னைப் பிரித்துப் பிரவேசித்தான், பிராணன் அபானம் சமானன் " உதானன் வியானன் எனச் சொல்லப்படுகிறான்.

* ஈண்டு பிரஜாபதி யென்றது ஈஸ்வரனை, அவனொருவனாயிருந்து திருப்தியடைய வில்லையென்றது, தம்மிடத்தில் லபகாலத்திலொடுங்கிய ஆன்ம கோடிகளைக் கருமபரிபாகங்களால் பிரேரிக்க சங்கற்ப முண்டாயிற்றென்பதாம், தன்னாலே தன்னைத் தியானஞ் செய்து என்பது, தம்முளடங்கிய சேதனா சேதனபிரபஞ்சத்தை

முந்திய கல்பத்தில் சிருஷ்டித்தவழி சிருஷ்டித்தானென்பது, கட்டைகளென்றது சரீரமாத்திரனிற்பது, அவனைக் சாகத்தன்னைப்பிரவேசித்தானென்றது ஐந்திலும் வியாபித்தானென்பது.

ஈசன் எங்ஙனம் அம்சத்துடனிருப்பன் என வினவ, எவன் மேலே கிளம்புகிறான் அவன் பிராணன், எவன் கீழே * போகிறான் அவன் அபானன், எவன் தூலமான அன்னதாதுவை அபானத்தால் வைத்து அணுவான † வன்னதாதுவை அங்கங்கடோறும் சேர்க்கின்றான் அவன் சமானன், எவன் அன்னபானங்களை விழுங்கவும் கக்கவும் செய்பவன் அவன் உதானன், எவனால் விருந்த நாடிகள் வியாபிக்கப்பட்டன அவன் வியானன்.

எவ்வித உமாம்சு ‡ அந்தர்யாமத்தை ஜயிக்கின்றது, அந்தர்யா மம் உபாம்சுவை ஜயிக்கின்றது, இரண்டின் நடுலிலே உஷ்ண முண் டாகின்றது அவ்வுஷ்ணமே புருஷன் அப்புருஷனே அக்கினி வைசுவாநான்.

* மேலே கீழே என்ற வியவகாரம் இதயத்தை யெல்லையாகவைத்து ஏற் பட்டன.
† அணு - சாரம்.
‡ உபாம்சு அந்தர்யாமம் இரண்டும் சோமயாகங்களில் சோமரசத்தை வைக்கும் பாத்திர விசேஷங்கள்.

இவனே வைசுவாநராக்கினியென வேறிடத்தும் சொல்லப்பட்டுள்ளது.

எவன் இந்தப் புருஷனுடைய இருதயத்திலிருக்கிறான், எவன் போஜனம் செய்யப்படும் வஸ்துக்களைப் பாகம் செய்கிறான், அவனே காதினை மூடிக்கொண்டால் * கேட்கப்படும் தொனியாவன், அவன் எப்போது வெளிகிளம்பப் பிரயத்தினம் செய்கிறானோ அப்போது இச்சத்தம் கேட்கப்படமாட்டாது.

* காதைப் பொத்திக் கொள்ளுதலாவது சண்முகீ முத்திரையா லடைத் துக் கொள்ளுதல்,

அவ்வித பரமாத்துமா ஐந்தாகப் பிரித்துக்குகையில் வைக்கப்பட்டான், மனோமயன் பிராணத்தைச் சரீரமாயுடையவன், பிரகாசரூபன் சத்திய சங்கற்பன் ஆத்மா.

இருதயத்திலேயுள்ள (ஆத்மா) அகிருதார்த்தனாய்த் தன்னை நினைத்துத் தான் புசிக்கிறவனென்றும், இந்திரியாபிமானியென்றும் எண்ணுகிறான். ஐந்து கடிவாளங்களால் விஷயங்களைக்கிரகிக்கின்றான், இவனுக்குள்ள புத்தியாதி இந்திரியங்களே கடிவாளங்களாம், கர்மேந் திரியங்கள் குதிரைகள், சரீரம் இரதம், மனம் நியந்தா, † பிரகிருதியே சாட்டை, இவனால் பிரேரிக்கப்படுகிற

இச்சரீரம்போலச் சஞ்சரிக்கிறது, மிருதனாய்ப்போகும் பட்சத்தில் இச்சரீரம் சேதன மாகத் தோன்றாது, இச்சரீரத்திற்கு அவனே பிரோகன்.

† நியந்தா - சாரதி.

ஆத்மா இச்சரீராவஸ்தையடைந்து நன்மை தீமையான கருமப் பயன்களாற் கட்டுப்பட்டுச் சரீரந்தோறும் சஞ்சரிக்கிறான், அவன் வியக்தனாதலானும் சூட்சுமனாதலானும், அதிருஸ்யனாதலானும், அக்கிராக்யனாதலானும், நிர்மமனாதலானும் அவஸ்தைக் ‡ கடந்தவனே அகர்த்தாவாயுள்ளவன் கர்த்தாவைப்போலிருக்கிறான்.

‡ நிர்மமன் - மமதை யில்லாதவன்.

அங்ஙனமுள்ள இவன் சுத்தன் ஸ்திரன் சலியாதவன் அலேபன் || அவ்வியக்கிரன் ¶ நிஸ்பிருகன் $ பார்ப்பவனைப் போலிருப்பவன் தனது சரிதத்தைப் புசிப்பவன், குணமயமான பலத்தால் தன்னை மறைத்துக் கொண்டிருக்கின்றான்.

|| அலேபன் - உபாதியில்லாதவன்
¶ அவ்வியக்கிரன் - ஞானகன னாயுள்ளவன்.
$ நிஸ்பிருகன் - விருப்பு வெறுப்பில்லாதன்.

## மூன்றாம் பிரபாடகம்.

ஓ பகவானே! இந்த ஆன்மாவின் மகிமையை நிரூபிக்கின்றார்களாயின் வேறொரு ஆன்மா யார்? எவன் நல்லதும் கெட்டது மான கருமபலன்களாற் கட்டுப்பட்டுச் சுத்து மசத்துமான யோனிகளையடைந்து கீழுமேலுமான கதிகளைத் துவந்துவங்களால் அவமதிக்கப்பட்டு அடைகிறானென்றனர்.

வேறாகிய பூதாத்மாயிருக்கின்றான், அவன் நல்லதும் கெட்டது மானகன்மபலன்களால் கட்டுப்பட்டுச் சத்து மசத்துமான யோனிகளையடைந்து கீழுமேலுமான கதிகளை இரட்டைகளால் பீடிக்கப் பட்டவனாயடைந்து சுழல்கின்றான். ஐந்து தன்மாத்திரைகள் பூதசப்தத்தால் விவகரிப்படுகின்றன. ஐந்து மகாபூதங்கள் வேறு சொல்லப்படுகின்றன, அவைகளின் சமுதாய மெதுவோ அதுசரீரம்.

எவன் சரீரமென்று சொல்லப்பட்டானோ அவனே பூதாத்மா அவனுக்கோராத்மாவுண்டு, அவன் தாமரையின் தண்ணீரைப் போல உள்ளவன், அவன் பிரகிருதியின் குணங்களால் கட்டுண்டு தன்னிலை மாறி மூடனாயிருக்கிறான், மூடனானபடியால் ஆன்மாவினிடத்துள்ள வனும் பிரபுவும் பகவானுமாகிய பிரோகனைக் காணவில்லை.

குணங்களால் தபித்துக் கொண்டு கலக்கமடைந்து அஸ்திரனாய் சஞ்சலனாய் அலைபவனாய் ஆசையுள்ளவனாய் பிரவிருத்தி யடைந்து அபிமானியாய் நான் எனது இது என்று நினைத்து பட்சித்தானே தன்வலையால்த்தன்னைக்கட்டிக் கொள்வது போலக் கட்டிக்கொண்டு பலன்களா லாக்கிரமக்கப்பட்டுச் சுழல்கிறான்.

எவன் காத்தாவோ அவனது அபிமானமே பூதாத்துமா, கரணங்களைக்கொண்டு உள்ளே புருஷனையுடைய சரீரமே பிரேரணஞ் செய்கின்றது. எங்ஙனம் இரும்பு குண்டானது நெருப்பில் காய்ந்து கர்த்தாக்களால் அடிக்கப்பட்டுப் பலவகையாகின்றதோ அங்ஙனமல்லவோ இப்பூதாத்துமா சரீரத்தால் வசப்படுத்தப்பட்டுக் குணங்களா வடிக்கப்பட்டுப் பலபோகங்கனைப் பெறுகின்றான். இனி எது முக்குணசமுதாயமும் எண்பத்து நான்குலட்ச யோனிகளாய்ப் பரிண மித்ததுமான பூதகணமுள்ளதோ அதுவே பல போகங்களாகும், அவைகளாகிய இந்தக்குணங்கள் புருடனால் பிரேரிக்கப்பட்டுச் சக் கிரமானது மறுசக்கிரத்தால் பிரேரிக்கப்பட்டுச் சுழல்கின்றது, இரும்பு குண்டையடிக்கும் போது அதினிடமுள்ள அக்கினியடி படு வதில்லையே அப்படி புருஷனடி படுவதில்லை பூதாத்மாவுடன் கலந்தி ருத்தலினாலடிபடுகின்றது.

இச்சரீரம் மைதுனத்தாலேயே உண்டானது. அசேதனம் நரகமென்று சொல்லக்கூடிய மூத்திர மூலத்தால் வெளிவந்தது. என் புகணிறைந்தது, மாமிசத்தாற் பூசப்பட்டது, மலம் மூத்திரம் பித்தம் கபம் மச்சை மேதை வசை முதலியவைகளாலும் வேறனேக மலங்களாலும் பரிபூரணமாய்த் திரவிய நிறைந்த பொக்கிஷம் போன்றது.

சம்மோகம் பயம் துக்கம் நித்திரை சோம்பல் விரணம் ஜரை ஓய்வு தாகம் கார்பண்யம் கோபம் நாத்திகம் அஞ்ஞானம் மாத்சரியம் கரணங்கள் குறைதல் மூடத்தன்மை இலச்சையில்லாமை நிந்தித்தல் கர்வம் நடுநிலையில்லாமை என்ற தாமச குணங்கள் கூடியும், திருஷ்னை சினேகம் ஆசை லோபம் இம்சை அதிர்ப்தி திருஷ்டி முயற்சி ஈருஷியை தன்னிச்சைவழி நடத்தல் சபலம் கவருதல் பொருள் தேடல் மித்திரனைக் காத்தல் பாதிக்கிரக மெய்தல் இந்திரியார்த்த துவேஷம் பற்று என்ற இராசச குணங்கள் கூடியும், இவைகளாற் கட்டுண்டு இப்பூதாத்மா பலரூபங்களைப் பெறுகின்றான்,

## நான்காம் பிரபாடகம்.

ஓ பகவானே! உமக்கு நமஸ்காரம் நீர் எங்களை அனுக்கிரகிக்க வேண்டும்; வேறுகதியில்லை, இப்பூதாத்மாவிற்கு அதிதியெவன், எவ னாலி தனை விட்டு ஆன்மாவிடத்திலேயே சாயுச்சியத்தை யடைவன்.

மகாநதிகளில் அலைகளைப் போலுள்ள விவர்க்கு முன்கன்மமானது நிவர்த்தமாயுள்ளது, சமுத்திரத்தின் தீரத்தைப் போலக் கடக்க முடியாதது. இவனுக்கு மிருத்துவியில் வரவு, கெட்டது நல்லதுமான கர்மங்களின் பல பாகங்களான

பாசங்களால் பசுவைப் போலக் கட்டப்படும் கட்டிலகப்பட்டதைப் போல சுதந்தரமிராது, எமன் இராச்சியத்திலுள்ளதைப் போல வெகுமயமான அவஸ்தையைப் பெற்றிருக் கும், கட்குடித்தவனைப் போலப் பாசவாசனைக் கள்ளால் மயங்கும், பாபக்கிரகத்தால் பிடிப்பட்டதைப் போலச் சுழலும், பெருநாகந்தீண்டினாற் போல ஆபத்துக்களால் வருந்தும், இருட்டிலகப்பட்டதைப் போல ஆசையிற்சிக்கும், இந்திரசாலத்தைப் போல மாயா மயமாகும், சொற்பனத்தைப் போலப் பொய்யாம். வாழைத் தண்டினைப் போலச் சாரமற்றிருக்கும் கூத்தாடியைப்போல வேஷமுடையதாம், சித்திரச் சுவர்போன்ற பொய்யழ குடையதாம், சத்தபரிச முதலிய எவ்விடங் களிளுளவோ அவையனர்த்தங்கங்களா யிருக்கின்றன, எவைகளிடத்து ஆசைவைத்த பூதாத்மா பரமபதத்தை நினைப்பதில்லை.

இவனல்லவோ இப்பூதாத்மாவின் பிரதிநிதி, இவனுக்கு ஞான முண்டாகும் வழி எதுவோ அது சுவதர்மத்தை யனுசரிப்பது, தன தாச்சிரமங்களிலேயே இருப்பது, சுவதருமமே எல்லாவற்றையும் கொடுக்கும், ஸ்தம்பமும் கிளைகளுமாம் மற்றது இதனால் ஊர்த்துவ தேசத்தை யடைவான், இல்லாமற்போனால் கீழேவிழுவான், சுவதர்ம மென்பது எது வேதங்களில் சொல்லப்பட்டதோ அது சுவதருமத் தைக் கடந்தவன் ஆச்சிரமியாகமாட்டான், ஆச்சிரமங்களி லுள்ள வனே தபசி எனப்படுவான், தபசு இல்லா தவனுக்கு ஆத்மஞான முண்டாவதில்லை, கர்மசித்தி யுண்டாகாதெனச் சொல்லப்பட்டது, தபசினால் சத்துவங்கிடைக்கும், சத்துவத்தால் பனங்கிடைக்கும் மனதால் ஆத்மாகிடைப்பான், ஆத்மாகிடைத்தால் நிவிருத்தியில்லை.

எங்ஙனம் கொளுத்தக்கட்டையில்லாத பொழுது நெருப்புத் தன்கா ரணத்தினாலேயே ஒடுங்குகின்றதோ அங்ஙனம் விருத்தியொழிந்த போழுது சித்தம் தன்காரணத்திலேயே ஒடுங்கும்.

மனமானது சத்தியத்தை யபேட்சித்து இந்திரியார்த்தங்களில் மயங்காமல் தன் காரணத்தில் வயித்தால் கர்மவசத்தைப் பற்றி வந்தவை எல்லாமகிருத்தங்களாகும்.

சித்தமே சம்சாரமாதலால் அதனைப் பூரண யத்தினத்தினால் சோதிக்கவேண்டும், சித்தமெந்தவழியிற் போகுமோ அங்ஙனமே (புருஷனாவான்) இது நித்தியமான அவசியம்.

சித்தத்தின் பிரசாதத்தால் சுபாசுபங்களான கன்மங்களைத் துலைப்பான். தெளிவடைந்த ஆத்மா ஆத்மாவிடத்தே யிருந்து அட்சயமான சுகத்தைப் பெறுவான்.

பிராணிகளுக்கு விஷயத்தி லெவ்வளவு ஆசையுண்டாகின்றதோ அவ்வளவு பிரமத்தினிடத்து உண்டானால் எவன் பந்தத்தை விட்டு மோட்சத்தை யடையமாட்டான்.

மனமென்றது சுத்தமென்றும் அசுத்தமென்றும் இருவகை. அசுத்தமென்பது காமசங்கற்ப முடையது. சுத்தமென்பது காமமில் லாதது, மனதை லயம் விட்சேபமிரண்டும் இல்லாததாகச் செய்து எப்பொழுது அமனஸ்கயோகத்தைப் பெறுகிறானோ அப்பொழுதே பரமபதம் கைகூடும். எது வரையில் இருதயத்தில் லயத்தையடை யுமோ அதுவரையிலேயே தடுக்க வேண்டும், இதுவே ஞானமும் மோட்சமும். மற்றவெல்லாம் கிரந்த விஸ்தாரங்களேயாம்,

சமாதியினால் சமஸ்தமலங்களுந் துலைந்து ஆத்மா வினிடத்தே வைக்கப்பட்ட சித்தத்தின் சுகம் ஏ துண்டோ அது வாக்கால் வர் ணிக்க முடியாது அப்பொழுதே தன்னாலே தன் னந்தக் கரணத்திலே கிரகிக்கப்படும்,

எங்ஙனம் ஜலத்தில் ஜலமும், அக்கினியில் அக்கினியும், ஆகா யத்தில் ஆகாயமும். (வேறாக) காணப்படுகிற தில்லையோ அங்ஙனம் ஆன்மாவினிடத்துச் சித்தம் லயிக்கும் பொழுது புருஷன் காணப்ப டுகிறதில்லையோ அங்ஙனம் ஆன்மாவினிடத்துச் சித்தம் லயிக்கும் பொழுது புருஷன் காணப்படுகின்றான்,

மனதே மனிதர்களுக்குப் பந்த மோட்சங்களுக்குக் காரணம், விஷயத்தைப்பற்றியது பந்தத்திற்கும், விஷயத்தை விட்டது மோட் சத்திற்கும் ஏதுவாம்.

நீ பிரம்மா, நீயே விஷ்ணு, நீயே உருத்திரன், நீயே பிரஜாபதி நீ அக்கினி, வருணன், வாயு, நீ இந்திரன், நீ சந்திரன், நீ மனு, நீ யசசு, நீ பூமி, நீ அச்சுதன், சுவார்த்தமாகவும், சுவாபாவிகார்த்தமாகவும், அநேகரூபனாய் ஆகாசத்திலிருக்கிறாய், விசுவேசர உனக்கு நமஸ்காரம், வசுவசுரூபன், விச்சுவகன் மாவைச் செய்பவன், விசுவத்தைச் செய்பவன், விசுவமாயை யுடையவன், நீ விசுவகிரீடையிலாசையுள்ள பிரபு, சாந்தாத்மா வாகிய உனக்கு நமஸ்காரம், பரமரகசியனும், சிந்திக்கக் கூடாதவனும், அப்பரமேயனும், ஆதியந்தமு மில்லாத உனக்கு நமஸ்காரம்,

தமசு ஒன்றேயாயிருந்தது. அதுபானால் பிரேரிக்கப்பட்டு விஷ மாச்சுது, இதுவேரஜசின் ரூபம், அந்தரஜசு பிரேரிக்கப்பட்டு விஷம மமாகியது, அது சத்துவத்தின் ரூபம், அச்சத்வம் பிரேரிக்கப்பட்ட அதில் ரசம் வெளிவந்தது, அந்த அம்சமே சேதனமாத்திரன் புரு ஷர்கள் தோறும் க்ஷேத்திரஞ்ஞன் ஸங்கல்பம் அத்யவஸாயம் அபிமா னம் இவைகளைத் தனக்குக் குறியாயுடையவன், பிரஜாபதி,

அவருக்குப் பிரமா, ருத்திரன், விஷ்ணு என்று ஆதியிலுண் டான சரீரங்கள் சொல்லப்படும், இனி எது தானவருடைய ராஜ சாம்சமோ அதுவே பிரமாவாம், எது தானவருடைய தாமசாம் சாமோ அதுதான் ருத்திரனாம், எது தானவருடைய சாத்வீகம் சமோ அது தான் விஷ்ணு.

இவனன்றோ ஒருமூர்த்தியாய் மும்மூர்த்தியாய் அஷ்ட மூர்த்தியாய் பதினொரு மூர்த்தியாயுள்ளவனாய் பனிரண்டு மூர்த்தியாயுள்ளவனாய் அளவிலா மூர்த்தியாயுள்ளவனாய்க் காணப்படுவன். காணப்படுதலால் பூதங்களிற் சஞ்சரிப்பான், எல்லாப் பூதங்களுக்கும் இருப்பிடமுமதிபதியுமாம் அவ்வாத்துமாவே உள்ளும் வெளியு முள்ளவன்.

## ஐந்தாம் பிரபாடகம்.

பிராணனென்றும் * ஆதித்தியனென்றும் இரண்டாகவல்லவோ இவன் ஆத்மாவைத்தரிக்கிறான்.

* பிராணனென்றது உருத்திரரூபம், ஆதித்தியனென்றது ருத்திரனின் கோரரூபம்

இனியிரண்டு மூர்த்திகளிருக்கின்றன. அவையுள்ளும் வெளியும் ஐந்து † ரூபங்களாக அகோராத்திரங்களையள விடுகின்றன. இந்த ஆதித்தனென்பவன் வெளியாத்மா, பிராணனென்பவனுள்ளாத்துமா என அனுமானஞ் செய்யப்படுகிறான்.

† உள்ளே ஐந்து ரூபங்களாவன - பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன், வெளியே ஐந்து ரூபங்களாவன - கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன்

(வேதங்கள்) ‡ கதியென்றல்லவோ சொல்லுகின்றது. எந்த வித்துவான் பாவங்களை யொழித்துப் பிரத்தியட்சனாய்ச் சுத்த மனதாயிருந்து கொண்டு கண்ணைத் * திருப்பிக் கொள்வான் அவன் ஆத்து மாவினிடத்துள் பிரவேசித்து வெளியாத்துமாக்களுக்கு அனுமிக்கப் படுகிறான்.

‡ கதி என்றது ஞானம்.

* கண்ணென்பது மற்றபுலன்களின் உபலக்கணம்.

எவன் ஆதித்தனடுவே † சுவர்ணமயமான புருஷனோ, எவனென் னைச் சுவர்ணம் போலப் பார்ப்பான், அவனே உள்ளே இருதயதாம ரையிலிருந்து கொண்டு அன்ன த்தைப் புசிக்கிறான்.

† ஆதித்தனடுவேயிருப்பவன் உருத்திரன், இதுசாந்தோக்கியம் தைத்திரீயம் முதலிய உபநிடதங்களிற்பிரசித்தம்.

எவன் உட்புறத்தில் இருதயதாமரையி லிருந்து கொண்டு அவனே அக்கினி ஆகாயத்தில் சூரியனாகிறான். அவன் காலனென்ற பெயருடையவன், கண்ணுக்குக் காணாதவன், எல்லாம் பூதங்களாகிற அன்னத்தைப் புசிக்கிறான்.

எது ‡ தாமரை? எவன் இவன்? தாமரை யென்பது வேதங்களே, எது அந்த விடத்திலுள்ள ஆகாசம், அதற்கு நான்கு திக்குகளும் நான்கு உபதிக்குகளும் ஸ்தானமாம், அக்கினிகீழேயுள்ளவன், வேறு புறத்திலிருந்த பிராணாந்தியர்கள் இவர்களைப் பிரணவம் வியாகிருதி காயத்திரி இவைகளா லுபாசிக்கவேண்டும்.

‡ தாமரை என்றது இருதயம் அது தகரோபாஸனாதலம், அக்கினி என்றது அக்கினியின் சிகையிலுள்ள ஆன்மஸ்வரூபத்திற்குக் குறிப்பு, ஆகவே உபாசகனெனக்காட்டப் பட்டான்.

இரண்டல்லவோ பிரமத்துக்குள்ள || ரூபங்கள், மூர்த்தமும் அமூர்த்தமுமாம், எது மூர்த்தமோ அது அசத்தியம், எது அமூர்த்தமோ அது சத்தியம், அது பிருமம் அது ஜோதி எது ஜோதியோ அது ஆதித்தியன்,

|| மூர்த்தம் இந்திரியங்களால் காணக்கூடியது, அமுர்த்தம் சுவானுபவத் தாலறியக்கூடியது

அப்பரமாத்மா பிரணவ சொரூபனாயுள்ளவன்; அவன் தனது சொரூபத்தை மூன்றுவகை யாக்கினான், பிரணவத்திற்கு மூன்று மாத்திரைகள், அம்மாத்திரைகளால் பிரபஞ்சபெல்லாம் அந்தப் பிரணவத்தினிடத்திலே ஓதமும் பிரோதமுமாய் இருக்கிறது, இப்படியே தியானஞ் செய்து அப்படியே ஆத்துமாவைச் சேர்க்கவேண்டும்.

எது உத்கீதமோ அது பிரணவம் அது உத்கீதம்; ஆதித்தனே பிரணவம் அவனே உத்கீதன்,

பிரணவனும், காம ரூபங்களைப் * பிரோணஞ் செய்பவனும், நித்திரையில்லா தவனும், கிழத்தன மில்லா தவனும், மிருத்யு வில்லா தவனுமாம்,

* ஐந்து விதமாகவறியக்கூடியன - சத்தியோசாதன் வாமதேவன் அகோரன் தத்புருஷன் ஈசானன்

மேலே வேரும் பிரமாவரை கிளைகளுள்ளதும் ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி முதலியன ஒன்றாலே கிரகிக்கப்பட்டன, அதுவே பிருமம், அவனுடையது மாயுள்ள இந்தரூபம் ஆதித்தியனும் பிரணவனுமாம், ஆகலின் பிரணவத்தால் இடைவிடாமலு பாசிக்கவேண்டுமென ஒருவனுக் கொருவன் அந்தரசத்தைப் போதிக்க வேண்டும்.

இவ்வட்சரமே † புண்ணியமாம், இந்த அட்சாத்தை அறிந்து எவன் எதை இச்சிக்கிறான் அவனுக்கது உண்டு.

† அட்சரம் - பிரணவம்

இப்பரமேச்சுரனுக்கு நாதத்துடன் கூடிய சரீரம் பிரணவமென்றும், லிங்கத்துடன் கூடிய சரீரம் ஸ்திரி புமான் நபும்ஸக மென்றும், அக்கினி வாயு ஆதித்தியன் என்றது தேஜஸ் உள்ளதென்றும், பிரம் விஷ்ணு ருத்திரன் ஆதிபத்ய முள்ளதென்றும் கார்கபத்யம் ஆகவணீயம் தெட்சிணாக்கினிய முகமுடையதென்றும் நான்குவேதம் அறிவுடைய தென்றும், பூ புவ ஸுவ என்பன லோகமுடையதென்றும், சென்றது வருவது நடப்பது என்பது காலமுடைய தென்றும், பிராணன் அக்கினி சூரியன் பிரதாபமுடைய தென்றும், அன்னம் ஜலம் சந்திரன் இவைகள் திருப்தியுடைய தென்றும், புத்தி மனது அகங் காபம் சேதன முடையதென்றும், பிராணன் அபானன் வியானன் பிராணணை யுடைய தென்றும், ஒன்றே யென்றும் அஜை என்றும் இவைகளை எவன் தோத்திரஞ் செய்வான் அவன் (பிரமத்தில்) அற் பிக்கப்படுவான். ஓ சத்தியகாம! இதுவே பாமும் அபரமுமாயுள்ளது இப்பிரணவமே அட்சரம்.

இஃதெல்லாம் எங்கு நிறைந்து சத்யமா யிருந்தது, பிரஜாபதி தவத்தைச் செய்து பூ : புவ : சுவ : என்றுச்சரித்தார். பிரஜாபதியின் தூலமான சரீர போகமுடைய விதுவாம், சுவ : என்பது அதற்குத் தாஸநாமங்களுடன் கூடியது புவ : பூ : என்பது பாதங்கள், ஆயத்த புருஷனுக்குப் பெரியோர் மாத்திரையான கண் ஆதித்யன், இவன் மாத்திரைகளைக் காண்பது கண்ணாலேயே, சத்தியமே கண்ணம் புருஷனானவன் கண்ணிலே யிருந்தே எல்லாப் பொருள்களிலேயும் விழுகிறான். ஆகையால் பூ பூர் புவ சுவ; என்று உபாசிக்கப்படுவன், இங்ஙனமல்லவோ சொல்லுகிறார், இதையே பிரஜாபதி சரீரமாய்த் தரித்தார், இதனிடத்தே எல்லாமுள்ளடங்கி யிருக்கின்றன, எல்லாவற்றிலும் இது உள்ளடங்கி யிருக்கின்றது, ஆதலால் இதனை யுபாசிக்கவேண்டும்.

தத்ஸ்விதுர்வரேண்யம் என்றால் இந்த ஆதித்யனே சவிதா, அவனே இவ்விதமான சித்தியை அபேட்சிக்கும் ஆத்மகாமனால் (உபா சிக்கத்தக்கவன்) என்று சொல்லுகிறார்கள் பிரமவாதிகள், இனி **பர் கோதேவஸ்ய தீமகீ** என்றால் சவிதாவே இங்கே தோன்றும் பொருள்க ளெல்லாம், அவனுடைய பர்கனெவனோ அவனைச் சிந்திக்கின்றேன் என்று சொல்லுகிறார்கள், பிரமவாதிகள் இனி **தியோயோந : ப்ரசோ தயாத்** என்றால் புத்திகளே யெமது தீகள் அவைகளை எவன் எமக்குப் பிரேரணஞ் செய்வான் அவனே என்கிறார்கள்,

இனி பார்க்கனென்பவன் இனி எவன் ஆதித்தனிடத்தும் இந்'தத்தாரகத்தில் நேத்திரத்திலு முள்ளவன் பார்க்க னென்ற பெயருடையவன் பா என்கிற பிரகாசத்தால் இவனுக்குக் கெதியிருத்தலால் பர்க்க னென்றும் பர்ச்சனம் (வெதுப்புவது) செய்தலால் இவன் பர்க்கன் ருத்திர னென்றார் பிருமவாதிகள்.

இனி பார்க்க னென்றது † இந்த லோகங்களை விளங்கச் செய்வதாலும், இந்தப் பூதங்களை விரும்பத்தக்கதாகச் செய்வதாலும், இந்தப் பிரஜைகள் அடைகிற

பரமேசுவரனிடத்து அவை போகின்றன. அவனிடத்திருந்தே வருகின்றன ஆகையாலும் பர்க்கனாதலால் பர்க்கனெனப்பட்டான்.

† பர்க்கன் ருத்திரன் இது மந்திரரா ஜமார்த்தாண்டத்திற்காண்க.

சத்துருக்களைச் சங்கரிப்பதால் சூரியனென்றும், எக்கர்மத்துக்கு முத்திரவு கொடுப்பதால் சவிதா வென்றும், எதனையும் ஆதானம் செய்வதால் ஆதித்திய னென்றும், பாவனம் செய்வதால் பலமான னென்றும், ரட்சணம் செய்வதால் தாயனென்றும் சொல்லப் படுவான்.

ஆத்மாவுக்கன்றோ ஆத்மா அமிர்தனென்ற பெயருடையவன், அறிபவன், நினைப்பவன், நடப்பவன். யடைப்பவன், ஆனந்த முண்டாக்குபவன், செய்பவன், செல்லுகிறவன், ரசிப்பவன், முகந்திடுவோன்,

எங்கு இரண்டாக அறிவு தோன்றுமோ அங்கே கேட்பான், பார்ப்பான், முகருவான், பசிப்பான் தொடுவான், எல்லா சொரூபனா யுள்ளவன் அறிவான், எங்கே அறிவு ஒன்றே யானது (அங்கே) காரியகாரண மில்லாமல் நிர்வசனமாய் சமானமில்லாமல் இருக்கும் அந்த நிலைமையை எங்ஙனம் சொல்லுவது.

ஆத்மாவன்றோ ஈசானன், சம்பு, பவன், ருத்திரன், பிரஜாபதி, விசுவசிருட், இரண்யகர்ப்பன், சத்தியன், பிராணன், அம்சன், சாஸ்தா, விஷ்ணு, நாராயணன், அர்க்கன், சவிதா, சம்ராட், இந்திரன், இந்து,

இவன் தபிக்கிறான் (அவன்) அக்கினியும் சகஸ்ராட்சனும் இரண்மயனுமான ஆனந்த மூர்த்தியால் அதிட்டிக்கப்படுவான்.

இவனே அறியத்தக்கவன், தேடத்தக்கவன், எல்லாப் பூதங்கட் கும் பயத்தைக் கொடுத்து அரண்யத்தையடைந்து அல்லது இந்திரி யார்த்தங்களை வெளிப்படுத்திச் சரீரத்தினின்றே தானே சிவனென வறியவேண்டும்.

விசுவரூபனும் அரிணனும் ஜாதவேதசும் பராயணனும் சோதியும் ஒருவனும் தபிக்கின்றவனுமாய்ச் சகஸ்தரரச்மியாய் நூறு சொரூபங்களை யுடையனுமாய்ப் பிரஜைகளின் பிராண ரூபனாய் இந்தச்சூரியனுதிக்கிறான்.

மைத்திராயணீயோபநிடதம் சம்பூர்ணம்,

மணவழகு.

சித்தாந்தம் - 1915 ஹூ -
செப்டம்பர் / அக்டோபர் / நவம்பர் / டிசம்பர் மீ